# பணமுப்பது

என்னும்

# காசின் மகிமை.

இஃது

திரிசிரபுரம் மகாவித்துவான்

மகா-௱-௱-ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை அவர்கள்

மாணாக்கரும், பிரசங்கசாகரவித்துவானுமாகிய,

திருக்கணமங்கை தனவந்தரி

வை. இராகவாசாரியார் அவர்கள்

இயற்றியது.

நாகபட்டணம்

ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1907

ஸ்ரீ

ஸ்ரீ ராமஜயம்.

# உதவிச்சிறப்பு.

நீதிமானும் விதிமானும் நிருத்தநஞ்செய்
திருமார்பன் நிமிருந்நாவால்.
நீதியாரும் ஹைகோர்ட்டு வக்கீலாய்த்
தன்பகற்றுந் தூயன்யாரும்
மதியாத எனைப்புரக்கு மாராசன்
மகிழ்போசன் வநசத்தாரோன
மதியாளன் பாலகிர்ஷ்ண மாமறையோன்
பல்லாண்டு வாழ்வான்மாதோ.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# பணமுப்பது

என்னும்

# காசின் மகிமை.

நூல்

கல்விதருவாள் கலைமங்கை * கருமைதருவாள் மலைமங்கை
செல்வந்தருவாள் திருமங்கை செயத்தைத்தருவாள் † செயமங்கை
எல்லாந்தருதற் கெவராலு மேலாதென்ப ரிவ்வுலகில்
எல்லாந்தரவல் லதுபணமே யென்னிற்பணத்துக் கிணையென்னே. (1)

வேறு.

அந்தணன்படைத் தற்றொழிலொன்றையே யாற்றும்
‡ இந்திராபதி காத்திடுந்தொழிலையே யியற்றும்
சந்த்ரசேகர னழித்திடுந்தொழிலையே சவைக்கும்
நந்தலில்பொரு ளியாவையுமிழைக்கு § நாயகனும். (2)

வேறு.

மாமகள் பொற்றா மரையுற்றது மஞ்
சாம்பவி செம்பொற் ‖ ற்றடம்வந்தது ஞ்சா ¶
மாம்பரன் பொன்னம் பலமார்ந் ததுவும்
நாம்புக ழாடக நகைசயா லன்றோ. (3)

வேறு.

பொன்னெனுந்திருப்பேர் கமலைபூண்டதுமம் புதவணன் வாசுதேவ
ப்பேர், நன்னருற்றதுஞ்சி ரிரணியகருப்ப னாமத்தைவிரிஞ்சனத் திய
தும், மின்னிடுவெள்ளி மலையொருவீடா விடையவன்மேயது மேலாம்,
உன்னுடைவாஞ்சை யாலெனிற்பணமே உன்னையேயுள்கு மென்
னுளமே. (4)

வேறு.

பூசுவது செஞ்சாந்தம் பூணுவது நெட்டங்கி
கூசுவது நல்லோரைக் கூடுவது தீயோரைப்
பேசுவது மாமாயம் பேணுவது பேரகந்தை
காசுபணம் உற்றவொரு கணிகைமகன் கண்டாமே. (5)

---

* கருமை=வலி † செயமங்கை=துர்க்கை. ‡ இந்திராபதி=விஷ்ணு.
§ நாயகனும்=பிர்மம். ‖ தடம்=மலை. ¶ சர்மாம்பரன்=சிவன்.

வேறு.

சாதியினனைநற் குலத்தினனாக்கும் சற்குலத்தவனையே தாழ்த்தும், வேதமோதியவனைப் புலைக்குலம்புகுத்தும் விபுதனைச் சிதடனா, வியற்றும், மாதரைவிலைக்கு விற்றிடப்புரியும் மக்களைவதைத்திடச் செய்யும், ஆதலாற்பணத்தின் ஆண்மையையுரைக்க அவனியிற்கற்றுளோர் யாரே.

பாவலர்க்காணி லோட்டமேபிடிப்பாய் பதடிகள்கையிலே நடிப்பாய், காவியங்கண்ணார் காந்தையர்கற்பைக் கணத்தினிலழிக்குவை கற்றோர், நாவினிலடங்கா மாயங்களாற்றி நரர்களைவாட்டுவை நாளும், பூவினிற்புதைப்போர் தங்கள்வாய்மண்ணைப் போடுவாய் புகல்வதென் பொருளே. (7)

சந்தணிகொங்கைத் தடங்கண்மங்கையர்தஞ், சாதியின்முறைமைகள் தவிர்ந்து, தந்தையர்தாயர் தம்முடைமக்கள் தம்பதிசகோதரர்த் துறந்து, நிந்தனைவளரச் சோரரைத்தழீஇத்தந் நிறையழிந்தோடுதல் பணத்தின், தந்திரமென்னிற் பணக்குறுபெருமை சாற்றுதற்கியாவரே தக்கோர். (8)

அந்தனைக்கமலக் கண்ணனேயென்றும் அழகிலான்றனைமதனென்றும், மந்தனைமதிசால் மந்திரியென்றும் மறம்புரிபாவியைத் தரும, நந்தனனென்றும் உலோபியைநித்த நரர்துதிகன்னனே யென்றும், புந்திகொடுரைத்தல் பொருட்பொருட்டன்றோ புகலுவீர் புவிபுகழ் புலவீர்! (9)

தேவடியாளை யருந்ததியென்று செகத்துளோர் செப்பவுஞ் செய்வை,
மாவடிவுடைய கற்பினாள் வேசி மகளென வழங்கவும் புரிவை,
காவடிப்பயலைக் காவலனாக்கிக் கசடர்கையுற்றுநீ விழிப்பாய்,
மூவடிவுற்றோர் விரும்புதற்குரிய மோகராவாகிய பவுனே! (10)

தாயொருதாசி தகப்பனோசலுப்பன் தம்பியின்மனைவிதன் தாரம், நேயனோமூடன் சேய்பலர்குரங்கு நீந்துதல்மதுக்கடல் நிமிரும், நோயெலாமிவன்பால் வாயெலாமுழுப்பொய் நோக்கினிற் சாக்கடைப் பன்றி, யாயினுமிவனை மனிதனென்றெண்ணல் அம்ம! நற்பணத்தினால் அன்றோ? (11)

தாயொருசாதி தந்தையோர்சாதி தன்னுடைமக்களோர் சாதி
வாயிலேதென்னை பனைமரச்சாதி * மனையவள்தம்பிபெண் சாதி
காயினைக்கனியாக் கனியினைக்காயாக் கழறுதலிவன்குணங் கடற்பார்
† வாயினிலிவனை மானிடனாக மதித்திடல்பொருளினா லன்றோ. (12)

* சாதி=கள்ளு. † வாய்=இடம்.

கல்வியுமறியான் கேள்வியுமறியான் கற்றவர்பாலிருந் தறியான்
பல்லலங்காரக் காவியும்படித்த பாவலன்ருனெனப் பகர்வான்
நல்லவையொன்றுங் கனவிலுநவிலான் நீயவைநாடொறு மியற்றும்
புல்லறிவாள னாயினுமிவனைப் புருடனுப்புரிந்தது பொருளே. (13)

கல்வியிற்பெரியன் கேள்வியிற்பெரியன் கவிஞரிற்பெரியவன் * கரையும், பல்வகைப்புராணப் பொருள்விரித்துரைக்கும் பாவலனழ கில்மன் மதனே, நல்லிசைப்பெருமான் † நடலையில்நாவான் நற்குண நாயக னெனினும், செல்வமொன்றிலனேற் செகத்துளோரிவனைச் சிறி யவர் ‡ கோட்டியிற் சேர்ப்பார். (14)

வேறு.

காசினாலுறுங் கல்வியுஞ் செல்வமும்
காசினாலுறுங் § கங்ககல் கீர்த்தியும்
காசினாலுறுங் காமமுஞ் சேமமும்
காசினாலுறுங் கற்றவர் ஞானமே. (15

வேறு.

புவநம்பலவும் படைத்தளித்துப் புகுமந்தத்தி லறவழிக்கும்
புநிதர்மூவர் பிரமமல புறத்தோர்தேவும் பிரமமல
தவநன்மதிநீ யைம்பூதச் சமுதாயங்கள் பிரமமல
சருவம்பிரமந் தனிப்பிரமஞ் சருவாதார பரப்பிரமம்
அவனையவனை யவரையதை யவையையண்டப் பரப்புகளை
ஆக்கும்பிரமம் வஞ்சியரை யணைக்கும்பிரமம் அரும்பிரமஞ்
சிவனைமாலைத் தேவர்களைச் சிலையிற்படைத்துத் திகழ்பிரமஞ்
$ சேருமருத்தப் பிரமமொன்றே சேகத்தோர்தியாநஞ் செய்பிரமம்

வேறு.

பணமுடையான் குணமுடையான்
பணமுடையான் மணமுடையான்
பணமுடையான் உணர்வுடையான்
பணமில்லான் பிணமொப்பான். ¶ (17)

* கரைதல்=சொல்லுதல். † நடலை=பொய். ‡ கோட்டி=கூட்டம்
§ கங்கு=கரை. $ அருத்தப்பிர்மவாதியர்=பொருளேபிர்மமெ ன்று வாதிப்போர்.

¶ இச்செய்யுள் "ஆவன்" என்னும் எச்சப்பயனிலை கொண்டது.

வேறு.

குணமொன்று மில்லாத குருடனேனுங்
கொச்சைமிகு குலத்திலுற்ற குலாலனேனும்
பணமென்னும் பொருளுளனேற் பாரிலுள்ள
பாவையரும் பாவலரும் * பதமற்றோரும்
குணக்கடலே யருட்கடலே கோவேதேவே
கோபாலா பூபாலா கூறுஞ்சீலா
இணையிகந்த இந்திரனே காமாசாமா
எங்கள் குலதெய்வதமே யெனச்சொல்வாரால் (18)

நெடுங்கால மோரிடத்தில் நில்லாதுற்ற
நேயர்களைப் பகையாக்கும் பகைநட்பாக்கும்
கடுங்காவற் படுத்திடுங்கால் விலங்கைவெட்டும்
கணிகையர்கை வசமாக்குங் கலகஞ்செய்யும்
மடந்தையர்கற் பழிக்கும்ரச வாதம்பண்ணும்
வழிகாட்டி யவர்வாயில் மண்ணைப்போடும்
திடமுடைய செல்வர்பிச்சை யேற்கச்செய்யுஞ்
சிற்றறிவோர் தமைவிபுத ராக்குங்காசே. (19)

பொய்சசாட்சி சொலிவிலங்கைத் தரிப்பர்காலில்
பொய்ப்பத்தி ரம்வரைந்து தீவிற்போவார்
பொய்த்தேவர் தமைப்போற்றி நரகஞ்செல்வார்
பொய்ச்சன்ன சம்பூண்டு புரட்டுச்சொல்வார்
பொய்நூல்கள் பலவுளறிப் போதிப்பாரால்
பொய்யுரைத்துப் பொய்யுரைத்து நாவுந்தேய்வர்
பொய்மெய்யா மெய்பொய்யாப் புரியுஞ்செய்ய
பொருள்சிறிது படைத்தபெரும் பொறியற்றோரே. (20)

வேறு.

சொல்லுறுமுலகந் தூற்றுதற்குரிய துர்க்குணஞ்சுமந்த வோர்சுமடன்,
புல்லுறுசமய மொன்றையு நம்பாப் புலையனம்புவிக்கணே பொருந்து,
செல்வமொன்றுளனேற் றிநகரனவனே திரியம்பகதேவனு மவனே,
அல்லியும்பகலும் பலர்தரிசிக்கும் ஆண்டகையவனலாலுண்டோ (21)

முகநகப்புகழ்வன் புறத்தினிலிகழ்வன் மூழுப்புரட்டிநர்க்கெலாந் தலைவன், மிகுமரியாதை யுள்ளவன்போல விதம்பலபேசுவன் வீணன், சகுனியைத்துச்சா தநன்றனையொத்த தப்பிலியாயினுங் கடல்சூழ், சகத்தினிலிவனே மானுடனெனச் சாற்றுதல் பணத்தினு லன்றோ. (22)

---

* பதம்=சோறு.

மன்மதன் நிகர்த்த வடிவழகுள்ளான் மாவரிச்சந்திரன் மெய்யில்,
தன்மசேதவதைநற் செய்கையிற்கலைகள் கற்றவோர்சாருவ பௌமன்,
நன்மையைப்பயக்கு * மொழுக்கிலேபெரிய னுயினுநானிலப் பரப்பிற்,
பொன்சிறிதேனும் படைத்திலனுயிற புல்லரிற்கடையனென் றிகழ்வார்.

அறம்பொருளின்பம் வீடெனுநான்கை யளித்திடவாக்கிக்காத் தழி
க்குந், திறம்பெறுமூவர் தம்மையும்படைத்தூச சிறப்பொடுபூசனை புரிய,
எறும்பினுமிழிவா யாயினுநேரத் தமிந்திரனுக்குற என்றும், உறும்புகழ்ச்
செல்வப் பொருளினையன்றி † உரமற்றைப்பொருள்களுக் குளதோ (24)

ஒருநொடியளவு நல்லுரைசொல்லான் உண்மையைமறந்துமே உ
ரையான், நரைதிரைமூப்பு வருமெனஎண்ணுன் நாடொறுங்கோடக ‡
நாய்போல், தெருவெலாந்திரிவான் சேட்டைகள்புரிவான் தீநர்கள்தம்
வயி றெரியப், பொருளினைக்கவர்வான் ஆயினுமிவனோர் பொருளெனப்
புரிந்தது பொருளே. (25)

வேறு.

தசவாய்வு மிடம்விட்டுப் புறம்பிலோடத்
தனிவாத பித்தமைய மேகோபிக்க
இசிவுடலெங் கும்வருத்தக் கண்ணீர்வார
இருகாலு மிருகையு மீரங்கொள்ளக்
§ குசப்பாலு மிறங்காமற் கடைவாய்சோரக்
குடர்நடுங்கக் கூகூவென் றுறவோரேங்க
நிசக்காலன் கைப்படும்போ தெல்லாம்நீங்கும்
நிகர்ப்பற்ற பொன்னாசை நீங்காதன்றே. (26)

திசைநாறு மழுக்குடையன் அழுகெனும்பேர்
சென்மமுதற் கேட்டறியான் றீயன்பேயன்
நிசமுரைக்குங் குலத்திலுறு நீசன் நாசன்
நீணிலத்தில் $ வேசரியை நிகர்ப்பானேனும்
¶ வசுவுடையா னென்னிலவன் மதனேயென்று
மாதரவன் பின்றொடர்ந்து மருவாநிற்பர்
இசைப்புலவர் கவிதைபுனைந் தேத்தாநிற்பர்
எல்லாரு மவன்மொழி நால்மறையென்பாரால். (27)

* ஒழுக்கு=சதாசாரம். † உரம்=வலி. ‡ கோடகம்=நாற்றெரு
கூடுஞ்சந்தி. § குசப்பால்=முலைப்பால். $ வேசரி=கழுதை,
¶ வசு=பொன்.

வேறு.

விறகுவிராட்டி தையலிலை வீதிதொறும்போய் விற்றலைந்தும்
வேசைமாதர் நேசர்களை வெருட்டியவர்பாற் சேர்த்துவந்தும்
நிறைவுசுமைகள் எடுத்துழன்றும் நிமித்தமின்றிப் பொய்யுரைத்தும்
நிதியுற்றவர்பாற் பல்லிளித்தும் நீலக்கடாப்போற் றிரிந்தவர்கள்
* பொறியுளாரை வஞ்சித்தோ பூமிப்புதையல் கண்டெடுத்தோ
பூவைமாரைப் புனைசுருட்டிப் புரிந்தோசெல்வம் படைத்தபின்னர்
நறுநெயுண்டிபொற்சீலை நகைகளுற்று நாணிலததோர்
நாளும்புகழச் செய்தல்பலர் நாடும்பணத்தா லன்றியெனே. (28)

வேறு.

பொய்மொழிமாறுப் பொதுமகள்புதல்வன் புந்தியில்புல்லன்மா மடையன், † கையரிறகடையன் கர்த்தபநடையன் கடுஞ்சொலனுயி னுங் காசொன், றெய்துவனுயி லவன்பிதற்றியவை ‡ எற்புடைத்தென் பரிவ் வுலகோர், § பையுடையுலகிற் பணக்குளபெருமை பண்ணவரி யாவரே படைத்தார். (29)

பிறந்தவரிறப்ப ரிறந்தவர்பிறப்ப ரென்பதுபெருமறைத்துணிவு, பிறந்தநாள்தொட்டு த்தினகரன்றிங்கள் பெருவிசும்புறையுநாள் அளவும், இறந்தனனெனுஞ்சொல லெய்திடேன்யானே யெனப்பலதீமைக ளியற்றி, அறந்தபுபாவி யாயினேனகந்தை யடைதலிப்பணத்தினு லன்றோ. (30)

வேறு.

காசேயுனக்குநல் லாசீர்வசநங் கழறுகின்றேன்
தூசேயவெள்ளிரூ பாவேயுனைத்திந முந்தொழுவேன்
தேசோமயநகொளுஞ் செம்பொன்னுருவந்திகழ் பவுனே
ஆசாரத்தோடுநின் பாதாம்புயந்தமை அர்ச்சிப்பனே. (31)

வேறு.

என்னுடை பாக்கள்வாழ்க இரும்புவி மாந்தர்வாழ்க
மன்னவர்வாழ்கவாழ்க மங்கையர்கற்பும் பொற்பும்
முன்னுறு தாயர்மூவர் மணவாளர்மூவர் வாழ்க
பொன்வெளி செம்புரூபப் பொருணிதம்வாழ்க மாதோ. (32)

---

றி=செல்வம். † கையன்=கீழ்மகன். ‡ எற்புடைத்து=அங்கீகரிக்கத்தக்கது. § பை=ஆதிசேடன்படம்.

ஸ்ரீஸீதாராமன்றிருவடிவாழ்க.

முற்றிற்று.